செய்கிறார்கள். அதனால் அவர்களுக்கு பலவிதமான செலவுகள் ஏற்படு கின்றன. அம்மாதிரி நிலங்களை அனுபவித்துக்கொண்டு வருபவர்களை அந்த நிலங்களிலிருந்து வெளியேற்றக்கூடாது என்று அரசாங்கம் கலெக்டர் களுக்கு உத்தரவு பிறப்பிப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதே கேள்விக்குத்தான் நான் முன்பு பதில் சொன்னேன். இம்மாதிரி பட்டா வழங்கவேண்டு மென்பதுதான் கொள்கை. ஆனால், ஆட்சேபணை ஏதாவது இருந்தால், பட்டா வழங்குவதற்கு இல்லை. எவ்வளவு தூரம் இதை தளர்த்த முடியுமோ, அவ்வளவு தூரம் தளர்த்தி ஆயக்கட்டுதாரர்களுக்கு பாதகம் இல்லாமல் இருந்தால், பட்டா வழங்கப்பட்டுதான் வருகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : ஆட்சேபணை இல்லாத இடங்களில் பல ஆண்டுகளாக நிலத்தில் இருந்துகொண்டு வருகிறார்கள். அதையாவது உடனடியாக பட்டா செய்து கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரி வந்த வகையில் தான் 3 லட்சம் ஏகர் பட்டா செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

SRI T. S. RAMASWAMI : பத்து ஆண்டுகளுக்கு மேலாக நிலம் வைத்திருக்கும் ஹரிஜனங்களையாவது அரசாங்கம் கவனிப்பார்களா ? அவர்களாவது வெளியேற்றப்படாமல் இருப்பதற்கு அரசாங்கம் கவனம் செலுத்துவார்களா, கன்யாகுமரி ஜில்லாவில் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதற்கு ' லிமிடேஷன் லா ' பார்க்கவில்லை. நான் முன்னால் சொன்ன அந்தக் காரணம் தான்.

SRI S. M. ANNAMALAI : இந்தக் கேள்வியின் முக்கிய நோக்கம் பட்டா செய்து கொடுப்பதில் காலதாமதம் ஆகிறது என்பதுதான். பட்டா செய்து கொடுப்பதை மேலும் துரிதமாகச் செய்வதற்கு இதர மாவட்டங் களில் ஸ்பெஷல் டெப்யூடி தாசில்தார்கள் போட்டிருக்கிறார்களே ? அம்மாதிரி இந்த மாவட்டத்திலும் போடப்பட்டதா ? அப்படியானால் இது வரையில் அவர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ? இல்லை யென்றால், இந்த மாவட்டத்தில் ஒரு டெப்யூடி தாசில்தாரை போடுவதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : எங்கே அவசியமோ அங்கெல்லாம் ' ஸ்பெஷல் ஸ்டாப் ' போட்டுதான் வேலை செய்யப்படு கிறது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : சட்டத்திலுள்ள இதுபோன்ற சிக்கல்களின் காரணத்தினாலே, ஆங்காங்கு உள்ள அரசாங்க நிலங்கள் ஹரிஜன ஏழைகளால் பயிரிடப்படுகிறபொழுது, அதிலிருந்து அரசாங்கத் திற்கு பலன் கிடைக்காமலும், உழைப்பாளிகளுக்கு பலன் கிடைக்காமலும், கிராமாதிகாரிகள் அதில் பணம் பெறுவது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அம்மாதிரி கனம் அங்கத் தினருக்கு ஏதாவது தெரிந்திருந்தால், அதுபற்றி என்னிடம் தெரி விக்கலாம்.

*Lands to Harijans (Kanyakumari)*

* 898 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the extent of Government lands given to landless Harijans in the Kanyakumari district for cultivation after the re-organization compared to the area given in the other districts ; and

24th March 1961]

(*b*) the number benefited in the Kanyakumari district compared to the other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) No information is available, Sir.

SRI T. S. RAMASWAMI : May I know, when lakhs of acres of land are given to Harijans in other districts, why in the Kanyakumari district alone this policy is not making any headway ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Now the 'Kuthagapattam' rules are prevailing in that area. The Government are contemplating to extend the provisions of the Board's Standing Order No. 15.

SRI T. S. RAMASWAMI : May I know whether lands will be allotted to Harijans at least on the 'Kuthagapattam' basis?

THE HON. SRI M. A. MANICKAVELU : Not only Harijans but all landless poor who will take to direct cultivation, will be given.

SRI M. K. SOMASUNDARAM : ஒவ்வொரு ஜில்லாவிலும் எவ்வளவு புறம்போக்கு நிலங்கள் இருக்கின்றன என்பது கணக்கிடப்பட்டிருக்கிறதா ? கன்யாகுமரி ஜில்லாவில் எவ்வளவு நிலங்கள் இருக்கின்றன என்று கணக்கிடப்பட்டிருக்கிறதா ? எத்தனை பேர்களுக்கு நிலம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு கணக்கு இருக்கிறதா ? இருந்தால் அதன் விவரம் யாது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நமக்கு புதிதாக வந்த 'டிரான்ஸ்பேர்டு டெரிடரி'யில் இருக்கும் நில 'ரூல்ஸ¬க்கும்' நம்முடைய ஜில்லாக்களில் இருக்கும் 'ரூல்ஸ¬க்கும்' வித்தியாசம் இருக்கிறது. அங்கு குத்தகை பாட்டம் என்ற 'ரூல்' இருக்கிறது. நம்முடைய திட்டப்பிரகாரம் அங்கு அமுலுக்குக் கொண்டு வந்தால், இதே மாதிரி அங்கும் செய்யலாம்.

SRI S. NAGARAJA MONIGAR : Is it not a fact that in that district the former Government were very considerate towards the Harijans and there is much less to do now?

THE HON. SRI M. A. MANICKAVELU : I think the hon. Member is not conversant with what is prevailing there. Am I to understand that this Government are not considerable towards them? They are as much, if not more.

SRI T. S. RAMASWAMI : இதற்கு முன்னால் உள்ள அரசாங்கம் அதிக உணவு உற்பத்தி திட்டத்தின் கீழ் ஹரிஜனங்களை தரிசு நிலங்களில் பயிரிடும்படிச் சொன்னார்கள். அதன்படி அவர்கள் தங்களுடைய உழைப்பையும், பணத்தையும் செலவழித்து பல ஆயிரக்கணக்கான ஏக்கர்களை பயிர் செய்திருக்கிறார்கள். அவர்கள் 10 ஆண்டுகளுக்கு மேல் பயிர் செய்துகொண்டு இருந்தால், மக்களிடையே ஆட்சேபணை வேறு இல்லாமல் இருந்தால், குத்தகை பாட்டம் 'பேஷிவிலாவது' அவர்களுக்கு அந்த நிலங்களைப் பகிர்ந்து கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : 'க்ரோ மோர் புட்' என்ற அடிப்படையில் நிலம் எங்கு வேண்டுமானாலும் பயிர் செய்யலாம் என்று அப்பொழுது சொல்லப்பட்டிருக்கலாம். அது ஒரு நெருக்கடியான நிலைமை. அம்மாதிரி அப்பொழுது சொல்லியிருந்தால்கூட, அதற்கு இப்பொழுது ஆட்சேபணை இருந்தால் அவர்களுக்குக் கொடுப்பதற்கு இல்லை.

[24th March 1961

SRI K. PERIANNAN: நீண்ட நாட்களாக நிலமற்ற ஏழை விவசாயிகள் அந்த நிலத்தில் விவசாயம் செய்துகொண்டு வந்தாலும், இப்பொழுது அந்த நிலத்தை பஞ்சாயத்துகளிடம் ஒப்படைக்கும்பொழுது, பஞ்சாயத்துகள் தரிசு நிலங்களை அதிகப்படியாக குத்தகைக்கு விடுகிறார்கள். அம்மாதிரி நிலமற்ற ஏழைகள் அதிகப்படியான குத்தகை கொடுக்க முடியாத காரணத்தினால், அந்த நிலத்தைக் குத்தகைக்கு விடாமல், அந்த விவசாயிகளுக்கே கொடுக்கும்படி பஞ்சாயத்துகளுக்கு உத்தரவிட முடியுமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: புதுச் சட்டப் பிரகாரம் இதெல்லாம் பஞ்சாயத்து நிர்வாகத்தின் கீழே வருகிறது. அதிலே புதுச் சட்டப்பிரகாரம் அரசாங்கம் ஒன்றும் செய்வதற்கில்லை. பஞ்சாயத்து மூலம் தான் செய்யவேண்டும்.

*Adult Education*

* 911 *Q*.—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of Adult Education Centres at present;

(*b*) the amount spent on Adult Education in 1959-60; and

(*c*) the number educated for the last year?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) 1,142;

(*b*) Rs. 3,41,700; and

(*c*) 31,082.

SRI K. VINAYAKAM: Is it not a fact that the expenditure on this account is a mere waste spent on a dying generation and no useful results have accrued out of this and will the Government take stock of the present situation and then adopt new methods, if necessary or give up the entire scheme?

THE HON. SRI C. SUBRAMANIAM: I think the question of waste is a matter of opinion. As far as the dying generation is concerned, I suppose every generation is a dying generation some time or other.

SRI A. VEDARATHNAM: இந்த அவையிலே இம்மாதிரி பல முறை முதியோர் கல்வியைப் பற்றி புகார் கூறப்பட்டு வந்திருக்கிறது. எனவே, இப்பொழுது மத்திய உணவுத் திட்டம் நடைபெறுவதைப் பரிசீலிக்க ஒரு கமிட்டி நியமித்ததுபோல, முதியோர் கல்வித் திட்டம் எப்படி நடைபெறுகிறது என்பதை ஆராய்ந்து அரசாங்கத்திற்கு ரிப்போர்ட்டு செய்ய, ஒரு கமிட்டி அமைப்பதற்கு அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதற்கு கமிட்டி அமைக்க வேண்டியது அவசியமில்லை. இது மாதிரி அதிலே அதிக பலன் ஏற்படவில்லை என்ற காரணத்திற்காக புதிய பள்ளிகள் இனிமேல் ஆரம்பிக்க வேண்டியதில்லை என்றும், வயது அதிகமாக ஆனவர்களுக்கு பயிற்சி கொடுக்கவேண்டியது அவசியமில்லை என்றும், 11 முதல் 18 வயது வரையில் அல்லது 8 முதல் 18 வயது வரையில் இருக்கக்கூடியவர்களுக்கு மட்டும் படிப்பு சொல்லிக்கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் இப்பொழுது தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN: இந்த முதியோர் கல்வித் திட்டத்தின் காரணத்தினால், கல்வி அறிவு பெற்று பலர் பட்டம் கூட பெற்றிருக்கிறார்கள். ஆகவே, முதியோர் கல்விக்கு அதிகப்படியாகப் பணம் ஒதுக்கி, அவர்கள் படித்து முன்னேற வசதி செய்யப்படுமா?